REGD. No. TN MS (C) 24

4 பக்கம் விலை 30 காசு



**ஆத்திரம்**

ஆத்திரம் என்பது பைத்தியத்திற்குச் சமானம். அதை வளர்த்து வந்தால் நிலைமை மிகவும் மோசமாகிவிடும்.

—அண்ணல் காந்தி

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**தனித்தன்மை**

கட்சியும் அரசும் தனியாக இருக்க வேண்டும் இரண்டுக்கும் மோதுதல் இருக்க கூடாது. இணைந்தும் போய் விடக் கூடாது

—பேரறிஞர் அண்ணா



மலர்: 1 | சென்னை 31—8—1977 புதன் | வெளியூர் 1—9—1977 வியாழன் | இதழ்: 316

# போக்குவரத்து ஊழியர் ஸ்டிரைக் தோல்வி முகம்

## ஓட்டல் பண்டங்கள் விலைக்குறைப்பு: மந்திரி எட்மண்ட் தீவிரம்

**சென்னை, ஆக. 31—ஓட்டல் பண்டங்கள் விலையைக் குறைப்பதைப்பற்றி இன்று உணவு அமைச்சர் எட்மண்ட் ஓட்டல் அதிபர்கள் சங்க பிரதிநிதிகளுடனும், நுகர்வோர் சங்கப் பிரதிநிதிகளுடனும் பேச்சு வார்த்தை நடத்தினர்.**

ஏற்கனவே ஓட்டல் உணவுப் பண்டங்களில் சில வகை பண்டங்களின் விலை கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டிருக்கிறது.



மேலும் பல பண்டங்களுக்கு [illegible] விஸ்தரிப்பது பற்றியும் மக்கள் நலன் கருதி இவைகளின் விலைகளைக் குறைப்பது பற்றியும் இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டது.

இதனால் ஓட்டல் முதலாளிகளுக்கு ஏற்படும் சங்கடங்கள் என்ன என்பது பற்றியும் ஆராயப்பட்டது.

இந்த பேச்சு வார்த்தையில் அதிகாரிகளும் கலந்து கொண்டனர்.



சென்னை வாணிமகாலில் நேற்று நடந்த கலைவாணர் விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றும் காட்சி,

## ஆயிரக்கணக்கில் பஸ்கள் ஓடுகின்றன

**சென்னை. ஆக 31— சில தொழிற்சங்கத் தலைவர்களின் தூண்டுதலால் நடந்த பஸ் போக்குவரத்துத் தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் முற்றிலுமாக தளர்ந்து வருகிறது.**

சென்னை நகரிலும், புறநகரிலும் ஆயிரக் கணக்கான பஸ்கள் இன்று (புதன்கிழமை) ஓடின.

சென்னை நகரில் போக்குவரத்து ஏறத்தாழ மாமூல் நிலையை அடைந்தது.

சென்னை நகரில் குறிப்பிடத்தக்க அளவிற்கு வன்முறைச் சம்பவங்கள் ஏதும் நடைபெறவில்லை என்று போலீஸ் கமிஷனர் பரமகுரு தெரிவித்தார்.

சென்னை நகரில் பல்லவன் போக்குவரத்துக்குச் சொந்தமான 565 பஸ்களும், தனியாருக்குச் சொந்தமான 249 பஸ்களும் இன்று ஓடின என்று பல்லவன் போக்குவரத்துக் கழக அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

புறநகரில் 75 சதவீதத்திற்கு அதிகமாக— 314 பஸ்கள் ஓடின என்றும் அவர் கூறினார்.

சென்னை நகரிலிருந்து இன்றைக்கு 184 விரைவு பேருந்துகள் புறப்பட்டுச் சென்றன.

ஏறத்தாழ ஆயிரத்து 400 பஸ்களுக்கு மேல் ஓடிக்கொண்டு இருக்கின்றன.

வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு இருந்த மேலும் 200 பஸ் டிரைவர்கள் 7 கண்டக்டர்கள் இன்று வேலைக்குத் திரும்பினார்கள்.

நூற்றுக்கணக்கான மாணவர்கள் பணிபுரிய

(2-ம் பக்கம் பார்க்க)

★ மக்களின் நலனைக் காப்பதே அரசின் கடமை

★ கழக அரசு தொழிலாளர் பக்கமே

# புரட்சித்தலைவர் விளக்கம்

## பஸ் ஊழியரை தூண்டிய சக்திகள்

**சென்னை, ஆக. 31— பஸ் ஊழியர் பிரச்சினை ஆனாலும் எந்த பிரச்சினை ஆனாலும் தொழிலாளர்கள் பக்கமே இந்த அரசு நிற்கும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் மீண்டும் திட்ட வட்டமாக அறிவித்தார்.**

**ஆறு மாதம் கூட ஆட்சியில் உங்களை உட்காரவிடமாட்டேன் என்று கூறியவர்களின் தூண்டுதலின் பேரில் பஸ் தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் நடக்கிறது என்று புரட்சித் தலைவர் கூறினர்.**



கலைவாணர் விழாவில் புரட்சித்தலைவர் பஸ் தொழிலாளர் பிரச்சினை குறித்து கூறியதாவது:

பஸ் ஸ்டிரைக் நடப்பதாகக் கேள்விப்பட்டிருப்பீர்கள், ஒரு சிலர் ''உங்களை 6 மாதம் கூட ஆட்சியில் உட்கார விடமாட்டேன்'' என்று கூறியவர்களின் தூண்டுதலால் இந்த நிலை ஏற்பட்டது. தொழிலாளர்களைத் தூண்டிவிட்டு உங்களுக்கு வ்வளவு பணம் வாங்கித் தருகிறேன் என்று கூறி இருக்கிறார்கள்.

கலைவாணர் உழைப்பவர்கள் விவசாயிகள் ஆகியோரின் ஆதரவாளராக இருந்தார். தொழிலாளர் வர்க்கம் எல்லா உதவியும் பெற்ற வர்க்கமாக இருக்க வேண்டும் என்று விரும்பினர்.

உடன் நடிப்பவர்கள் தவறு செய்தால் கலைவாணர் கண்டிப்பார். அதே நேரத்தில் சக ஊழியர்கள் கோபப்பட்டால் அதற்கு என்ன காரணம் என்று முதலில் கண்டறிவார்.

தொழிலாளர் நலனில் அக்கறை கொண்டுள்ள அரசும் அந்த வகையில் தான் பிரச்சினைகளை அணுகுகிறது.

நகரில் இப்போது 900 பஸ்கள் ஓடுகின்றன. 230 தனியார் பஸ்கள் ஓடுகின்றன

திடீர் என்று வேலைநிறுத்தம் செய்யும் முடிவு எங்கே போய் நிற்கும்?

அலுவலகத்துக்குச் செல்லும் ஊழியர்கள் தொழிற்சாலைகளுக்குச் செல்லும் தொழிலாளர்கள் ஆஸ்பத்திரிக்குச் செல்கிறவர்கள், பிரசவத்துக்காக மருத்துவமனை

(2-ம் பக்கம் பார்க்க)



## பம்பாயில் சபாநாயகர் முனு ஆதிக்கு வரவேற்பு

பம்பாய், ஆக. 31— வெளி நாடுகளுக்கு சுற்றுப்பயணம் மேற்கொள்ளும் தமிழ்நாடு சட்டப் பேரவைத் தலைவர் முனு ஆதிக்கு பம்பாயில் செப்டம்பர் 2, 3 தேதிகளில் தென்னக மக்கள் சார்பில்

(2-ம்பக்கம் பார்க்க)

(5-ம் பத்தித் தொடர்ச்சி)

சி. வி. அன்புத்தம்பி ஜெ. பாலன் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

பணவிழாவிற்கு எம்.ஜி.ஆர். பிக்சர்ஸ் என். எஸ். ராமதாஸ், கழக தலைமை நிலைய துரையரசன் திரைப்பட இயக்குநர் நீலகண்டன் மற்றும் பிரமுகர்களும் உறவினர்களும், ஏராளமான தோழர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

(புரட்சித்தலைவர் முழுப் பேச்சு நாளை வரும்)

## சக்தி திருமணம்: புரட்சித் தலைவர் வாழ்த்து

சென்னை, ஆக 31— அண்ணா பத்திரிகையில் சர்க்குலேசன் மேனேஜராக பணிபுரியும் சக்திக்கும் வள்ளி அரசிக்கும் புரட்சித் தலைவர் தலைமையில் தியாகராயநகர் மகாலட்சுமி கல்யாணமண்டபத்தில் இன்று காலை திருமணம் நடைபெற்றது.

முதல்வர் புரட்சித் தலைவர் மாலை எடுத்துக் கொடுக்க மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டனர்.

புரட்சித்தலைவர் மங்கல நாணை மணமகனிடம் எடுத்துக்கொடுக்க மணமகன் சக்தி கூடியிருந்தோரின் வாழ்த்துக் கரவொலிக்கிடையே மணமகள் கழுத்தில் அணிவித்தார். பிறகு மணமக்களை வாழ்த்திபுரட்சித்தலைவர் பேசினர்.

மணமக்களை வாழ்த்தி கைத்தறிதுறை அமைச்சர் ராஜாமுகமது பேசினர் மற்றும் ஜேப்பியார், சடகோபன், ராமகிருஷ்ணபாபு, கற்பகவிநாயகம்,

(1-ம் பத்தி பார்க்க)

# கலைவாணர் விழா நடத்த புரட்சித்தலைவர் நிதி உதவி

**சென்னை, ஆக 31— கலைவாணர் விழாவை ஆண்டு தோறும் சிரமமின்றி நடத்த அரசு நிதி உதவி செய்யும் என்று புரட்சித்தலைவர் அறிவித்தார்.**

கலைவாணர் விழாவில் புரட்சித்தலைவர் மேலும் கூறியதாவது:

கலைவாணர் விழாவை அவருடன் இருந்த நாராயணன் ஆண்டுதோறும் நடத்தி வருகிறார். இவர் நடத்துவதைப் பார்த்து சிலருக்கு ஆத்திரம் வந்தது. ''சல்லிக்காசு இல்லாத நாராயணன் இப்படி விழா நடத்துவதா'' என்று கூறிய அவர்கள் விழா நடத்த ஒரு குழு அமைத்தார்கள். ஏதோ சில ஆண்டு விழா நடத்தினார்கள் பின்னர் விழா நடத்துவதை விட்டுவிட்டார்கள்.

ஆனால் நாம் இந்த விழாவை தொடர்ந்து நடத்துவோம்: எந்த நிலைமை ஏற்பட்டாலும் ஆண்டுதோறும் பெரியார் அண்ணா, கலைவாணர் விழாக்களை நடத்தியே தீருவோம்.

(பலத்த கைதட்டல்)

அதனால் முதலமைச்சர் பதவி போனாலும் சரி—தேர்தலில் தோல்வி வரும் என்ற நிலைவந்தாலும் சரி—மக்களுக்காகப் பாடுபட்டவர்களை நாம் ஒருபோதும் மறக்கமாட்டோம்:

(மீண்டும்பலத்தகைதட்டல்)

இந்த விழாவை தமிழக அரசு நேரடியாக நடத்தமுடியாவிட்டாலும் இந்த விழா நடத்த எவரிடமும் கையேந்தி செல்லாத நிலையைத் தவிர்க்க நிதி ஒதுக்குவோம், அதிலிருந்து வரும் வட்டியில் நிகழ்ச்சியை நடத்தலாம்,

அந்த பணத்தை தனியாக யாரும் எடுத்துச் செலவழிக்க முடியாதபடி விழாவுக்கு மட்டும் பயன்படும் வகையில் ஏற்பாடு செய்யமுதலமைச்சராகிய நான் பொறுப்பு ஏற்கிறேன்,

பொங்கல் விழாவை கலைவாணர் விழாவாக நகர் சங்கம் கொண்டாட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்,

## அவரது சிறப்பு

கலைவாணர் எல்லாத் துறையிலும் சிறந்து விளங்கினார் ஒருமுறை நாதசுர மேதை ராஜாரத்தினம் பிள்ளை வெளியே ஒரு நிகழ்ச்சிக்கு புறப்பட தயாரானார்: அவருடன் கலைவாணரும் இருந்து அவசரமாக புறப்படும்படி சொன்னார்: நாதசுரம் சுருதி சரியாக இருக்கிறதா என்று பார்த்துக் கொள்கிறேன் என்று ராஜாரத்தினம் பிள்ளை சிறிது வாசித்துப் பார்த்தார்.

உடனே கலைவாணர் ''நேரம் ஆகிறது அங்கே போய் பார்த்துக்கொள்ளலாம்' என்றார் உங்களுக்கு நாதசுரம் வாசிக்கத் தெரியுமா என்று ராஜாரத்தினம் பிள்ளை கேட்டார்.

கலைவாணர் அந்த நாதசுரத்தை வாங்கி அதை அழகாக வாசித்துக் காண்பித்தார். எதையும் தெரியும் என்று

(2-ம பக்கம் பார்க்க)



## சிலை திறப்பு

சென்னை, ஆக. 31— தந்தை பெரியார் சிலை திறப்பு விழா சிறப்பாக கொண்டாட ஆயிரம் விளக்குத் தொகுதிக்கான விழாக்குழு உறுப்பினராக கீழ்க்கண்டோர் நியமிக்கப்பட்டுள்ளதாக சென்னை மாநகர கழகப் பொறுப்பாளரும் பொதுச் செயலாளர் புரட்சித் தலைவரின் சிறப்புப்பிரதிநிதியுமான ஜேப்பியார் தெரிவித்துள்ளார்.

இதுபற்றி அவர் தெரிவித்துள்ளதாவது,

தந்தை பெரியார் சிலைத் திறப்புவிழா சிறப்பாக கொண்டாடுகிற வகையில் ஆயிரம் விளக்குத் தொகுதியைச் சார்ந்த கிளைக்கழக சார்பு மன்ற நிர்வாகிகள் அடங்கிய குழுவிற்கு க. எஸ். மணி தலைவராகவும், ப. அங்கமுத்து செயலாளராகவும் பெ. சீனிவாசன் பொருளாளராகவும் இருந்து பணியாற்றுவார்கள்.

சி. மணிக்கண்ணன், எம். ஆர். ராஜேந்திரன், காசிம், மு. மன்னன், டி. ஆர். துளசி, ராமமூர்த்தி ஆகியோர் செயற்குழுவினராக இருந்து செயல்படுவார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

# மாணவர்களின் பெற்றோர்கள் புரட்சித் தலைவருக்கு வாழ்த்து

சென்னை, ஆக. 31— மாணவர்களின் பெற்றோர் கூட்டம் நடந்து முடிந்ததும் முதல்வர் புரட்சித்தலைவருக்கு பெற்றோர்கள் வாழ்த்து தெரிவித்தனர் ஒரு முதியவர் புரட்சித் தலைவரிடம் கைகுலுக்கி ''மாணவர் பிரச்சினையைத் தீர்க்க நீங்கள் கூட்டிய இக்கூட்டம் மனநிறைவைத் தந்தது: மாணவர்கள் பெற்றோர்களின் கடமைகளை உணர்த்திய உங்களுக்கு என் வாழ்த்துக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்று கூறினார்:

இதுவரை அரசியல்வாதிகளின் முடிவு மாணவர்களின் முடிவாக இருந்தது. இனிமேல் பொறுப்புள்ள நல்ல பெற்றோர்களின் முடிவு மாணவர்களின் முடிவாக அமைய விருக்கிறது என்று புரட்சித்தலைவர் கூறினார்.

மாணவர்கள் பெற்றோர்கள் கலந்துரையாடல் கூட்டத்திற்காக எழும்பூரில் உள்ள போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்ததும் அவரை தலைமை போலீஸ் அதிகாரி (ஐ.ஜி.) ஸ்டிரேசி, கமிஷனர் பரமகுரு ஆகியோர் வரவேற்றார்கள்; போலீஸ் அணிவகுப்பு மரியாதையையும் முதலமைச்சர் புரட்சித்தலைவர் ஏற்றுக் கொண்டார்.

## நாட்டு குறிப்பு

### 1-9-77

**தேவகோட்டை**
ஒத்தக்கடை (காந்தி ரோடு)
மாலை 6 மணி
தலைமை: எஸ். தவசி
பேசுவோர்: மதுரை இளவரசன், மதனுபாய் அங்குசாமி, ராஜேந்திரன் மற்றும் பலர்.

**வைகை அணை**
பாலா இல்லம்
காலை 11 மணி
ஆண்டிப்பட்டி தொகுதி செயல்வீரர் கூட்டம்

**பெரியகுளம்**
நகராட்சி தங்கும் விடுதி
மாலை 3 மணி
பெரியகுளம் தொகுதி செயல்வீரர் கூட்டம்

**அம்பத்தூர்**
மாலை 6 மணி
(அம்பத்தூர் பஸ் நிலையம் அருகே)
வட சென்னை மகளிர் அணியினர் சார்பில்
பொதுக் கூட்டம்
தலைமை: கஸ்தூரி பாலன்.
பங்கு பெறுவோர்: அமைச்சர்கள்
ஜி. ஆர். எட்மண்ட்
பா. குழந்தைவேலு
பரங்கிமலை நாகராசன், உடையப்பன், எம். குப்புசாமி, இன்பராஜ், கே. கே. ராவ், சி. வி. விஜயன் எஸ். ராமன், லோகநாதன், ஆ. சு. வரதராஜன், வெங்கட்ராமன் எம். ஜி. கர்னல், ஓ. பி. தருமலிங்கம், அண்ணாமலை

### 2-9-77

**அம்பத்தூர்**
மாலை 6 மணி
(அம்பத்தூர் பஸ்நிலையம் அருகே)
வடசென்னை மகளிர் அணியினர் சார்பில் கூட்டம்
தலைமை: கஸ்தூரிபாலன்
பங்கு பெறுவோர்:
அமைச்சர்
பி. டி. சரஸ்வதி
நூர்ஜகான் ரசாக் எம். பி
டி. சகுந்தலா, ராஜேஸ்வரி, லட்சுமி முத்து, நாகலட்சுமி, சரசம்மா, கண்ணம்மா, ஆண்டாள் ரவுத், வண்ணை ஜெயா, உபகார மேரி, அம்சா மோகன்ராஜ் மற்றும் பலர்.

# பஸ் ஊழியரை தூண்டிய சக்திகள்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

செல்லும் தாய்மார்கள் ஆகியோர் பாதிக்கப்படுகிறார்கள். எனவே நியாயமற்ற முறையில் 'திடீர்' என்று நடவடிக்கையில் இறங்கலாமா?

தொழிலாளர்களை தூண்டிவிட்டு உங்களுக்கு இவ்வளவு வாங்கித் தருகிறேன் என்று கூறி வேலை நிறுத்தம் செய்யச் சொல்லி இருக்கிறார்கள்.

## முரண்பாடு

ஒருவர் 100 ரூபாய் இடைக்கால நிவாரணமாகத் தரவேண்டும் என்று கேட்கிறார். மற்றொருவர் 75 ரூபாய் கொடுங்கள் என்கிறார். இன்றைக்கு 50 ரூபாய் தருவீர்களா என்று கேட்கிறார். ஒருவர் தொலைபேசியில் அமைச்சர் பொன்னையனிடம் 30 ரூபாயாவது தரமுடியாதா என்று கேட்டிருக்கிறார்.

இந்தப் பிரச்சினையில் அவர்கள் தொழிலாளர் நலத்தைவிட தங்கள் தனிப்பட்ட கவுரவ பிரச்சினையாகக் கருதுகிறார்கள்.

தொழிலாளர்களின் உரிமைகள் காக்கப்பட வேண்டும் என்பதில் அமரர் பேரறிஞர் அண்ணா காட்டிய வழிப்படி, கலைவாணர் சொன்ன கருத்துப்படி இந்த அரசு நடந்து வருகிறது.

## மண்டையை உடைத்த கதை மறக்க முடியுமா

கருணாநிதி ஆட்சிகாலத்தில் பஸ்தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தபோது எவ்வளவு கொடிய தாக்குதல்கள் நடத்தப்பட்டன. பஸ் தொழிலாளரின் மண்டை உடைக்கப்பட்டது. தடியடி நடத்தினார்கள். பஸ்கள் கொளுத்தப்பட்டன. கலவரச் சூழ்நிலையை உருவாக்கினார்கள்.

ஆனால் இப்போது ஸ்டிரைக் நடப்பதாக பேசிக் கொள்கிறோம். (பலத்த கைதட்டல்) நிலைமை அந்த அளவுக்கு சுமுகமாக உள்ளது.

முன்பெல்லாம் ஸ்டிரைக் நடந்தால் பஸ் டிரைவர்கள்- கண்டக்டர்களை அடிப்பார்கள். அடிப்பவர்களை யார் என்று சொல்ல வேண்டியதில்லை பஸ் ஓட்டும் தொழிலாளரை அடிப்பார்கள் அவர்கள் வண்டியை நிறுத்தி விட்டு ஓடி விடுவார்கள் இதனால் நடு வழியில் பயணிகள் தவிக்கும் நிலை ஏற்படும்.

இப்போது அமைதியான நிலையில் பஸ்கள் ஓடுகின்றன. பஸ்சை தாக்க வருகிறவர்களை பொது மக்களே பிடித்து போலீசில் ஒப்படைத்துவிடும் நிலை ஏற்பட்டுள்ளது.

அரசின் பொறுப்பு மிக முக்கியமானது. 2 ஆயிரம் 3 ஆயிரம் தொழிலாளர்களின் நலனைக்காக்க வண்டும். அதே சமயம் நகரில் உள்ள 40 லட்சம் மக்களின் போக்குவரத்துக்கும் வசதி செய்து அவர்கள் கடமையைச் செய்யவகை செய்யவேண்டும். தராசைப் பிடித்துப் பார்த்தால் இப்போது பொதுமக்களுக்கு உடனடியாக போக்குவரத்து வசதி செய்ய வேண்டியுள்ளது.

முன்பு இருந்த அரசு கடன்கார அரசாக ஆக்கி பற்றாக்குறை நிலை ஏற்பட வழி வகுத்துள்ளது. புதிய வரியும் போட முடியாது.

போட்டால் ஏழைகளை பாதிக்காத வரியைப் போட வேண்டும் என்று கருதி டூத்பேஸ்ட், டூத் பிரஷ் ஆகியவற்றுக்கு வரியை சற்று உயர்த்தஉள்ளோம் ஆனால் இதைக் கண்டு ஐயோ மக்கள் வாழ்வே சீரழிந்துவிடும் என்கிறார்கள் டூத்பேஸ்டுக்கு வரிபோட்டால் அது ஏழைகளையா பாதிக்கும். ஆலங்குச்சி வேலங்குச்சியை வைத்துத்தான் இப்போதும ஏழைகள் பலர் பல் துலக்குகிறார்கள். அது பல்லுக்கு உறுதியானது தான் ஆகவே இந்த வரி ஏழைகளை பாதிக்காது.

## காழ்ப்பு இல்லை

தற்போது 900க்குமேற்பட்ட பஸ்கள் ஓடுகின்றன. இன்னும் முன்னூறு நானூறு பஸ்கள் தான் ஓடவேண்டும் தி. மு. க. வினர்கூட பஸ் ஓட்டுகிறோம் என்று முன் வந்துள்ளனர். அவர்கள் பற்றி பரிசீலித்து அதன் பிறகே அவர்களிடம் பஸ்களை ஒப்படைக்க இருக்கிறோம்.

எங்களுக்கு யார் மீதும் காழ்ப்பு இல்லை. பஸ்ஊழியர்களை கைது செய்யவும் விரும்பவில்லை அரசு எப்போதும் தொழிலாளர் நலனில் அக்கறை கொண்டு இருக்கும்.

முன்பு இருந்த அரசால் இப்போது ரூ 30 கோடி கடனை வைக்கத்தக்கமுறையில் பட்ஜெட் உருவாகி உள்ளது. கலைவாணர் நினைவு நாள் கொண்டாடும் போது கலைவாணரிடம் இருந்த நேர்மை துணிவு ஆகியவற்றை நாம் கடைபிடிக்க வேண்டும்.

இவ்வாறு புரட்சித்தலைவர் கூறினார்.

# கல்வி அமைச்சர் அரங்கநாயகம் சுற்றுப்பயணம்

சென்னை, ஆக. 31— பல்லடம் தொகுதியில் 5-9-77-ல் கல்வி அமைச்சர் எஸ். அரங்கநாயகம் கீழ்க்கண்ட நிகழ்ச்சிகளில் கலந்து கொள்கிறார்.

5-9-77 மாலை 3 மணி காடாம்பாடி கொடி யேற்றுவிழா, 3-30 மணி செங்கத்துறை. 4 மணி அய்யன்கோவில் பள்ளிக் கூடவிழா, 4-30மணி சோமனூர் கொடியேற்றுவிழா. 5 மணி அய்யம்பாளையம் வரவேற்பு, 6 மணி பெத்தாம்சிபாளையம் 7 மணி பள்ளபாளையம் பேரூராட்சி வரவேற்பு.

7-30 மணி வேலாயுதம் பாளையம் கொடியேற்று விழா 8 மணி பல்லடம் பொதுக் கூட்டம்.

நிகழ்ச்சிகளில் சட்டமன்ற உறுப்பினர்கள் பா. கோ. கிட்டு எஸ். பழனிச்சாமி, இரா. மணிமாறன் எஸ். தண்டபாணி, கே. நாச்சிமுத்து கே. என். கே. இராமசாமி ஆகியோர் கலந்து கொள்கின்றனர்.

# கலைவாணர் விழா...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அவர் கூற மாட்டார் ஆனால் தெரிந்து வைத்திருப்பார்.

"மாயா மச்சேந்திரா" படத்தில் பொய்க்கால் குதிரை ஆட்டம் வைக்க முடிவு செய்தார்கள். நான் கலைவாணரிடம் நீங்களே அதை ஆடவேண்டும் என்று கேட்டுக் கொண்டேன்.

உடனே அவர் என்னால் 2 கால்களினாலுமே நிற்க முடியவில்லை. கட்டையில் ஏறி நின்று என்னால் எங்கே ஆடமுடியப்போகிறது என்றார். கடைசியில் ஆடவேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டது.

அன்றே அவர் பயிற்சியை தொடங்கி இருக்கிறார். படப்பிடிப்பின் போது காலில் கட்டைக் கட்டிக்கொண்டு பொய்க்கால் குதிரை ஆட்டத்தை மிக அருமையாகச் செய்து காட்டினார். அந்த அளவுக்கு கலைவாணர் முயற்சி உடையவர்.

வயலின் வாசிப்பார் ஆர்மோனியம் மேண்டலின் வாசிப்பார் கவிதை எழுதுவார். பாடுவார். உரையாடல் எழுதுவார். நடிப்புச் சொல்லித் தருவார், டைரக்ட் செய்யும் ஆற்றல் இருந்தது.

## கலைஞர்கள் கடமை

நடிகர்கள் தங்கள் உடலை பேணிப் பாதுகாப்பது அவசியம். மதுவிலக்கு இலாகா என்னிடம் உள்ளது பெர்மிட் வைத்திருப்பவர்கள் திருப்பிக் கொடுத்து விடுங்கள் காலம் மாறுகிறது. மாற்றத்துக்கு ஏற்றபடி நாம் ஒன்றிப் போக வேண்டும். (பலத்த கைதட்டல்)

விதிமுறைகளை மீறினால் சட்ட கடமையைச் செய்யும் சட்டம் நாணல் மாதிரி வளைந்து தராது. இரும்பு மாதிரி நிற்கும். எனவே கலை உலக சகோதர சகோதரிகள் பெர்மிட் வைத்திருந்தால் உடனே திருப்பிக் கொடுக்க வேண்டும் நடவடிக்கை எடுக்க இடம் வைத்து விடக் கூடாது.

ஆரம்பத்தில் குடிப்பவர்கள் மீது கடும் நடவடிக்கை அதிகம் வேண்டாம சாராயம் காய்ச்சுவோர் அதற்காக பணம் கொடுப்போர் சாராயம் விற்போர் மீது அதிக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று போலீஸ் துறையினரை கேட்டுக் கொண்டேன்.

எனவே மதுவிலக்கு தீவிரமாக அமல்படுத்தபடும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு புரட்சித்தலைவர் கூறினார்.

## கடைசி செய்தி

### பள்ளிகள் கல்லூரிகள்: மேலும் விடுமுறை

சென்னை, ஆக. 31— பஸ் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தை யொட்டி சென்னை நகரில் உள்ள பள்ளிகள், கல்லூரிகள் இந்த வாரம் (செப்டம்பர் 3-ஆம் தேதி முடிய முழுமையும் விடுமுறை அளிக்கப்பட்டுள்ளதாகக் கல்வி இலாகா செயலாளர் ரங்கபாஷ்யம் நிருபர்களிடம் கூறினார்.

# பஞ்சாயத்து யூனியன் மக்கள் குழுக்கள்: காளிமுத்து அறிவிப்பு



சென்னை, ஆக. 31—"தனி அதிகாரிகளின் நிர்வாகத்தில் உள்ள ஊராட்சி ஒன்றியங்களில் மக்கள் பிரதிநிதிக் குழுக்களை அமைக்கும் கருத்தை அரசு பரிசீலித்து வருகிறது" என்று உள்ளாட்சித்துறை அமைச்சர் கா. காளிமுத்து மேலவையில் கூறினார்.

ஊராட்சிகள் திருத்த சட்ட முன்வடிவு மேலவையிலும் நிறைவேறியது. இதன் மீது நடந்த விவாதத்திற்கு பதில் அளித்து உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து கூறியதாவது —

இங்கே பல உறுப்பினர்கள் பல்வேறு கருத்துக்களை தெரிவித்த போதிலும் அவர்களுடைய வாதங்களில் இழையோடிய மையக் கருத்து 374 ஊராட்சி ஒன்றியங்களுக்கும் ஒரே நேரத்தில் தேர்தல் நடத்த வேண்டும் என்பதாகும்.

374 ஒன்றியங்களுக்கும் ஒரே நேரத்தில் நேரடித் தேர்தல் நடத்த வேண்டும் என்பது தான் அரசின் முடிவு. சில ஒன்றியங்கள் பல்வேறு குற்றச்சாட்டுக்களுக்காக கலைக்கப்பட்டன. கலைக்கப்பட்ட அத்தனை ஒன்றியத்தின் தலைவர்களும் தவறு செய்தவர்கள் என்று சொல்ல முடியாது.

இதற்கிடையில் நேரடியாக தலைவர்களை தேர்ந்தெடுக்க பஞ்சாயத்துக்கள் சட்டம் திருத்தப்பட இருக்கிறது.

இங்கே இந்த சட்டத் திருத்தத்தைப்பற்றி உறுப்பினர் குறிப்பிடுகையில் விசித்திரமானது என்றார். யானையோடு வாலும் சேர்த்தால்தான் சித்திரமாகும். நல்ல எண்ணத்தின் அடிப்படையில் இந்த திருத்தம் கொண்டுவரப்பட்டது.

தனி அதிகாரிகள் நிர்வாகம் நடந்து வரும் ஊராட்சி ஒன்றியங்களில் மக்கள் பிரதிநிதிகளை நியமிக்க வேண்டும் என்று கேட்டார்கள். மக்கள் பிரதிநிதிகளைக் கொண்ட குழுக்களை அமைக்கும் கருத்தை அரசு பரிசீலித்துக் கொண்டிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

பின்னர் சட்ட முன் வடிவு (மசோதா) நிறைவேறியது. முன்னதாக நடந்த விவாதத்தில் கே. எஸ். அப்துல் வகாப் (முஸ்லீக்), ஒய். வெங்கடேச தீட்சிதர் (ஜனதா), எஸ். வீராசாமி (தி. மு. க.) ஜி. சாமிநாதன் ஆகியோர் பேசினார்கள்.

# ஸ்டிரைக்

(1ம் பக்கத் தொடர்ச்சி)

முன் வந்தவண்ணமிருக்கின்றனர்.

பஸ் நிலையங்களிலும் பஸ் நிற்குமிடங்களிலும் பெண் ஊர்க்காவல் படையினரும் போலீசாரும் பொதுமக்களுக்கு இன்னல் ஏற்படாதவாறு பாதுகாத்து வருகின்றனர்.

இன்று மாலைக்குள் மேலும் பலபஸ்கள் ஓடும் என்றும் நாளை (வியாழக்கிழமை) காலை மாமூல் நிலைமை திரும்பி பஸ்கள் ஓடும் என்றும் கருதுவதாக பல்லவன் போக்குவரத்து கழக அதிகாரி ஒருவர் கூறினார்.

போக்குவரத்து ஊழியர்கள் ஸ்டிரைக் தொடர்பாக இதுவரை 1833 பேர் கைது செய்யப்பட்டு சென்னை, வேலூர், கடலூர் மத்தியச்சிறைகளில் காவலில் வைக்கப்பட்டுள்ளனர்.

பஸ் ஸ்டிரைக் நடைபெறுவதாகவே தெரியாத அளவிற்குப் பொதுமக்களுக்கு வசதிகளை அரசு செய்துதந்துள்ளது என்று என்று பஸ் நிற்குமிடங்களில் கூடியிருக்கும் பொது மக்கள் பேசிக் கொள்கிறார்கள்.

## இதுவும் செய்தி

### அதிகாரி எங்கே?

புதுடெல்லி, ஆக. 31— இந்திய பாதுகாப்பு இலாகாவில் ஒரு முக்கியமான திட்டம் வகுக்கும் பிரிவில் வேலை செய்து கொண்டிருக்கும் ஒரு உயர் அதிகாரியை 5வாரமாகக் காணவில்லை.

அவர் பெயர் ஈஸ்வர சந்திரபன்சால், உதவி காரிய தரிசி. ஜூலை 20-ந் தேதி 2 நாள் லீவில் போன அவர் தமது வீட்டிலிருந்து வெளியே கிளம்பினார். பாங்கிலும் தபால்நிலைய சேமிப்பிலும் தமது கணக்கில் இருந்து ரூ. 6 ஆயிரம் எடுத்தார். அதன் பிறகு அவர் எங்கே இருக்கிறார் என்று தெரியவில்லை.

'திடீர்' என்று ஒருநாள் அவரது மனைவிக்கு அந்த அதிகாரியின் மோதிரம், கைக்கடிகாரம் ஆகியவை பார்சலில் வந்தன. அவை காசியில் இருந்து அனுப்பப்பட்டதாக தெரிகிறது அந்த அதிகாரி காசியில் சன்யாசம் மேற்கொண்டிருக்கலாம் என்பது போலீசார் கருத்து.

### பூட்டோவின் 1 லட்சம் சைக்கிள்

பாகிஸ்தான் பிரதமராக இருந்த பூட்டோ மார்ச் மாதத் தேர்தலில் தனது கட்சித் தொண்டர்கள் பயன்படுத்த 1 லட்சம் சைக்கிள்கள் வாங்கினாராம் 500 ஜீப் கார்களும் 15000 மோட்டார் சைக்கிள்களும் வாங்கி தனது கட்சித் தொண்டர்களுக்கு விநியோகித்தாராம.

அரசாங்க பணத்தில் அவை வாங்கப்பட்டதாக புகார் கூறப்பட்டுள்ளது.

# முனு ஆதிக்கு வரவேற்பு...

(1ம் பக்கத் தொடர்ச்சி)

வரவேற்பு, பாராட்டு வழியனுப்பு விழா நடை பெறுகிறது.

2-ந் தேதி மாலை 6 மணிக்கு பம்பாய் விமான நிலையத்திடலில் வரவேற்பும், 3-ந் தேதி மாலை 7 மணிக்கு பம்பாய் தமிழ் சங்க கலை அரங்கில் (சயான் மருத்துவ நிலையம் எதிரில்) பாராட்டு விழாவும் அன்று இரவு 11 மணிக்கு பம்பாய் விமான நிலையத் திடலில் வழியனுப்பு விழாவும் நடை பெறுகிறது.

மராட்டிய மாநில தென்னக வாழ் மக்கள் சார்பில் இந்த விவரத்தை எஸ். எல். ஜான் அறிவித்தார்.

கனடாவில் நடைபெறும் காமன்வெல்த் நாடுகளின் பாராளுமன்ற மாநாட்டில் கலந்து கொள்ள தமிழக சட்டப் பேரவைத் தலைவர் முனு ஆதி வரும் வெள்ளிக்கிழமை, (செப்டம்பர் 2 ஆம் தேதி) மாலை 4-45 மணிக்கு சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து பயணமாகிறார்.

முனு ஆதியை வழியனுப்ப பெருந்திரளாக விமான நிலையத்திற்கு மாலை 3 மணிக்கு வருமாறு தாம்பரம் அண்ணா திராவிட முன்னேற்ற கழக மும் அனைத்து உலக எம். ஜி. ஆர். மன்றங்களும் சார்பு மன்றங்களும் வேண்டுகோள் விடுத்துள்ளன.

# புரட்சித் தலைவர் அனுதாபம்

குடியாத்தம், ஆக. 31— குடியாத்தம் ஏ. வி. துரைசாமியின் தாயார் மரணம் அடைந்தார். அன்னையை இழந்து வாடும் தோழர் துரைசாமிக்கு முதல்வர் புரட்சித்தலைவர் தமது இரங்கலைத் தெரிவித்து அனுதாபத் தந்தி அனுப்பியுள்ளார்.

# கிரிக்கெட்

## இங்கிலாந்து-ஆஸ்திரேலியா டெஸ்ட் டிரா

லண்டன், ஆக. 31— இங்கிலாந்து — ஆஸ்திரேலியா 5-வது கடைசி கிரிக்கெட் டெஸ்ட் இன்று இங்கு டிராவில் முடிந்தது.

இங்கிலாந்து இரண்டாவது இன்னிங்ஸ்சில் 2 விக்கெட்டுகள் நஷ்டத்திற்கு 57 ரன்கள் எடுத்து இருந்த நிலையில் போதிய வெளிச்சம் இல்லாததால் ஆட்டம் பாதியிலேயே நிறுத்தப் பட்டு விட்டது.

இந்தத் தொடரில் இங்கிலாந்து அணி 3-0 என்ற நிலையில் வெற்றிக் கனியைப் பெற்றது.

## விளையாட்டு அரங்கம்

6 வயது சிறுமி பங்கேற்பு

### சென்னையில் நீச்சல் போட்டி

சென்னை, ஆக. 31— சென்னையில் செப்டம்பர் 2, 3 தேதிகளில் நீச்சல் போட்டி நடைபெறுகிறது தமிழ்நாடு, கேரளா கர்நாடகா, ஆந்திரா ஆகிய நான்கு மாநிலங்களைச் சேர்ந்த நாலு வீரர்கள் போட்டியில் கலந்து கொள்கின்றனர்.

வயது அடிப்படையிலான பிரிவுகளின் கீழ் நடைபெறும் போட்டியில் தமிழ் நாட்டின் சார்பில் 6 வயது சிறுமியான ரேணுகா சீனிவாசன், 7-வயதான அமீனா சர்க்கார், 8-வயதான பிரீத்சிங் சோப்ரா ஆகியோர் கலந்து கொள்கின்றனர்.

ரேணுகாதான் போட்டியில் கலந்து கொள்பவர்களில் சின்னஞ்சிறியவள் என்பது குறிப்பிடத்தக்கது.

### ரஷ்யா பெற்ற 95 பதக்கம்

சோபியா, ஆக. 31— இங்கு நடைபெற்ற பல்கலைக்கழக விளையாட்டு விழாவில் ரஷ்யா 31 தங்கப்பதக்கம் 38 வெள்ளிப்பதக்கம், 28 வெண்கலப்பதக்கம் ஆக 95 பதக்கங்களைப் பெற்றது. அமெரிக்கா 19 தங்கம், 11 வெள்ளி 14 வெண்கலப்பதக்கம் ஆக 44 பதக்கங்களையும் பெற்று இரண்டாம் இடம் வகிக்கிறது.

இந்த விளையாட்டு விழாவில் 84 நாடுகளைச்சேர்ந்த 4600 வீரர்கள் பங்கு கொண்டனர், 26 நாடுகள் தான் பதக்கம் பெற்றன.

PUBLISHED BY K. NAVINDRAN ON BEHALF OF M/S THANGAMANI PUBLICATIONS FROM 156, LLOYD ROAD, MADRAS-14 AND PRINTED BY K. THANGAMAJAN AT NAVSAKTHI PRESS, 60, KUTCHERI ROAD MADRAS-4.
EDITOR: M.G.CHAKRAPANI

திண்டுக்கல்லில்

# கண்ணனுக்கு வரவேற்பு



சென்னை, ஆக. 31— சென்னையிலிருந்து பாண்டியன ரயில்மூலம் திண்டுக்கல்லுக்கு வந்த அண்ணா திமுக எம். ஜி. ஆர்மன்ற பொருளாளர் கே. கண்ணனுக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது.

உடுமலைப்பேட்டையில் நடைபெறும் பொருட்காட்சியில் நடைபெறும் நாடகத்தில் பங்கேற்கச் செல்லும் வழியில் திண்டுக்கல் வந்த மன்றப் பொருளாளர் கே. கண்ணனுக்கு மதுரை கே. எஸ். இராசேந்திரன், ஏ. திருவானந்தம் மதுரை மாநகர் எம். ஜி. ஆர். மன்ற பொறுப்பாளர் கோ. நவநீதகிருஷ்ணன். பி. ஜி. சங்கரன், மதுரை சுந்தரம். ஏ. பி. நாகராஜன், திண்டுக்கல்லைச் சேர்ந்த பிரியாக ராசன். எம். ஜீவா, பாண்டித்துரை ஏ. பெருமாள் மாணிக்கம்பிள்ளை, டி. வில்லியம் ஆகியோர் மாலைகள் அணிவித்து வரவேற்றனர்.

# அறந்தாங்கி, ஆவுடையார் கோவில் ஒன்றியங்கள் செயல்வீரர் கூட்டம்

புதுக்கோட்டை மாவட்டம், அறந்தாங்கி ஒன்றியம், ஆவுடையார் கோவில் ஒன்றியம் மற்றும் செலட்டூர் பகுதி கழகச் செயல் வீரர்கள் கூட்டம் அறந்தாங்கி அசோசியேட் தியேட்டரில் செப்டம்பர் மாதம் 10-ந் தேதி காலை 10 மணிக்கு நடைபெறுகிறது.

புதுக்கோட்டை கழக நாடாளுமன்ற உறுப்பினர் வீ. சா. இளஞ்செழியன் தலைமையிலும், துணை சபாநாயகர் திருநாவுக்கரசு முன்னிலையிலும் நடைபெறும் இந்தக் கூட்டத்திற்கு கழக உடன் பிறப்புகளும், சார்புமன்றத் தோழர்களும் தவறாது பங்குகொள்ள வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

அன்பரசன்
புதுக்கோட்டை மாவட்ட அமைப்பாளர்
அனைத்திந்திய அண்ணா திமுக கழகம்

## நீர் மட்டம்

தமிழ் நாட்டிலுள்ள பல்வேறு அணைக்கட்டுக்களில் உள்ள தண்ணீர் மட்டம் கீழ மீட்டர் கணக்கில் கொடுக்கப்பட்டுள்ளது. அடைப்புக் குறிக்குள் இருப்பது அணைக்கட்டின் மொத்த உயரமாகும்.

மேட்டூர்- 18 92 (36 62)
பெரியாறு- 4.81 (14-64)
வைகை- 10-85 (21-65)
பாபநாசம் 11-01 (45-10)
கிருஷ்ணகிரி 10.24 (15-6)
சாத்தனூர் 2078 (36 27)
மணிமுத்தாறு— 8-27 (30-00)
பேச்சிப்பாறை— 1-74 (14-64)
பெருஞ்சாணி— 7-94 (12-47)

## மக்கள் மன்றம்

### நகரசபை கவனிக்குமா?

ஐயா,

போடிநகர் மதுரை மாவட்டத்தில் மூன்றாவது பெரிய நகராகும். இங்கு சுமார் 1 லட்சம் பேர் வாழ்கிறார்கள். இவ்வூரில் சுமார் 3800 குழாய் இணைப்புகள் வீடுகளுக்குப் பொருத்தப்பட்டுள்ளன, அருகிலுள்ள கொட்டகுடி அணையிலிருந்து போதுமான தண்ணீர் கிடைத்தும் கொண்டுவர செலவு அதிகமாகிறது என்று ஒவ்வொரு வீட்டிலும் தங்கள் சொந்த செலவில் குறிப்பிட்ட காலத்திற்குள் மீட்டர் பொருத்த வேண்டும் என்றும் தவறினால் தொடர்பு துண்டிக்கப்படும் என்றும் நோட்டீஸ் வழங்கப்பட்டுள்ளது.

250 ரூபாய் செலவழித்து மீட்டர் பொருத்தவேண்டும் என்பது இங்குள்ள ஏழை நடுத்தர மக்களால் இயலாத ஒன்று எனவே இப்போது ஒரு இணைப்புக்கு 3 ரூபாய் என வாடகைவசூல் செய்வதை 4 ரூபாயாக உயர்த்தி அதன் மூலம் செலவை சரிகட்ட முயற்சிக்குமாறு போடி நகரசபை அதிகாரிகளையும் சம்பந்தப்பட்ட உயர் அதிகாரியையும் எங்கள் போடி நகர் மக்களின் சார்பில் கேட்டுக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள
எம். சேது
போடி நாயக்கனூர்
மதுரை மாவட்டம்

★ தி. மு. க. ஆட்சியில் ஊழலோ ஊழல்

★ பைல்கள் தரும் திடுக்கிடும் சாட்சியங்கள்

# கைது பட்டியல் தொடரும்

## புரட்சித் தலைவர் அறிவிப்பு



**சென்னை, ஆக. 31— அரசு பைல்களைப் பார்க்கும் போது பலஊழல்கள், முறைகேடுகள் முந்திய ஆட்சியில் நடந்துள்ளது என்று புரட்சித் தலைவர் கூறினர்.**

கண்ணீர் விடும் நிலை அளவுக்கு முறைகேடுகள் நடந்திருப்பதை கோப்புக்கள் கூறுகின்றன. குற்றம் செய்தவர்கள் தப்பிக்க முடியாது. பல பேர் கைது செய்யப்பட இருக்கிறார்கள் என்றும் புரட்சித்தலைவர் கூறினர்.

சென்னை வாணிமகாலில் நடந்த கலைவாணர் என்.எஸ்.கே.யின் 20வது நினைவுநாள் விழாவில் கலந்துகொண்டு பேசுகையில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

எந்த மனக்குறையும் இன்றி நிம்மதியாகவாழக் கூடிய மனிதன் பிறக்கவில்லை.

எந்தவகையிலாவது மனிதனுக்கு ஏதாவது இருக்கும். சிலருக்கு உடலிலேகுறை இருக்கலாம்.

பேசுகிறவர் திறமையும் அனுபவம் உள்ளவராக இருந்தாலும யானைக்கும் அடிசறுக்கும் என்பது போல் சறுக்கும். ஆகவேகுறையற்ற மனிதர் இல்லை.

யார் யார் என்ன காரியம் செய்கிறார்கள் என்பதைவைத்தே அவர்களது நிலையை மக்கள் முடிவு செய்கிறார்கள்.

ஒரு காரியம் செய்யும் போது அதன் தன்மையை வைத்தே மக்கள் பாராட்டுவார்கள் ஒருவருக்கு பாங்கில் 50 லட்சம் ரூபாய் இருக்கும் அவர் ஒரு லட்சம்ரூபாயை நன்கொடை அளிப்பார். அது ஒரு பெரிய நன்கொடை ஆகிவிடாது. ஏனென்றால் அவர் ஒரு லட்சத்தை நன்கொடையாக் கொடுத்து விட்டாலும் மீத ரூ. 49 லட்சம் அவர் கணக்கில் இருக்கும்.

ஆனால் அன்றாடம் உழைத்து அந்த வருமானத்தை வைத்தே அவ்வப்போதுவேண்டிய பொருள்களை வாங்கி குடும்பம் நடத்தும்தொழிலாளர்கள் 1ரூபாய், 2ரூபாய் 5ரூபாய் என்று நன்கொடை கொடுத்தால் இதுதான் பெரியநன்கொடையேதவிர பல லட்சம் பாங்கில் வைத்திருப்பவர் ஒரு லட்சம் நன்கொடை அளிப்பது பெரிய காரியம் ஆகிடாது. எனவே அந்த ஏழைத் தொழிலாளியைத்தான் பாராட்ட வேண்டும்.

கலைவாணர் படத்தில் நடிக்க பெற்ற தொகையையும், அவர் உதவி கேட்டு வருகிறவர்களுக்கு நன்கொடை அளித்த பணத்தையும் மதிப்பிட்டால் அவர் நன்கொடை அளித்த தொகையே உயர்ந்துநிற்கும்.

### மக்கள் பணம்

இங்கே பேசியகிருஷ்ணமூர்த்தி சில கோரிக்கைகளைச் சொன்னார்.

நான் கஷ்டப்பட்டு சம்பாதித்தபணத்தை அடுத்தவர்களுக்கு கொடுக்கும் போது என்னை யாரும் தடுக்க உரிமைகிடையாது ஆனால் அரசாங்கபணத்தை செலவு செய்யும் போது கவனமாக இருக்க வேண்டும். மக்களுக்கு கணக்குச் சொல்ல வேண்டும்.

1 காசு, 2 காசு, 4 அணு 8 அணு என்றுமக்கள்தந்த வரிப் பணத்தை எடுத்து செலவு செய்யும் போது அதில் அதிக கவனம் காட்டுவோம். மக்களை நிராதரவான நிலையில் வைக்காமல் அவர்கள் தரும் பணம் நல்ல முறையில்—நன்றாக யோசித்து நல்ல காரியங்களுக்காக எடுக்கப்பட்ட முடிவுக்காகவே செலவழிக்கப்படுகிறது என்ற நிலையை உண்டாக்குகிறோம்.

இதைச் சொல்லி தப்பிக்கபார்ப்பதாகக்கருதக் கூடாது. உங்கள் கோரிக்கைகளை பரிசீலித்து முடிவெடுப்போம்.

### தி. மு. க. ஊழல்

எதையும் சரிவர சிந்தித்துச் செய்ய வேண்டி உள்ளது. முந்திய (தி. மு. க.) அரசின் கோப்புக்களை (பைல்களை) பார்க்கும்போது மிகவும் துன்பப்பட்டு கண்ணீர் விடும் நிலையில்தான் அவை உள்ளன. தொழில் துறை வளர வேண்டும் மக்கள் நல்வாழ்வுபெற வேண்டும் எனபதற்காக எத்தனையோ கமிட்டிகள். போர்டுகள் மற்றும் தொழில் முதலீட்டுக் கழகம். தொழில் வளர்ச்சிக் கழகம் எல்லாம அமைக்கப்பட்டுள்ளன. ஆனால் அவற்றின் நிதி முறையாக செலவிடப்பட்டுள்ளதா? எனவே முந்திய அரசின போது நடந்த இந்த நிலைக்கு எல்லோரும குற்றவாளி என்று கூறிவிட முடியாது. நூறு பேர் கெட்டுப்போவதற்கு ஒருவர் காரணம் என்ற நிலை உள்ளது.

திட்டங்கள் நிதிநிலைமைகள் எல்லாம்நோய்வாய்ப்பட்ட நிலையில் வைத்துச் சென்றிருக்கிறார்கள். இனி ஊசி போட வேண்டும். அப்போது தான் நோயாளி பிழைப்பார். ஆனால் ஊசிபோடுவதற்கு முன்நோயாளியை பிழைக்க வைக்க தண்ணீர் கொடுக்கலாம் என்ற நிலை உள்ளது. எனவே நோயாளிக்கு குடிக்க தண்ணீர் கொடுக்கும் நிலை ஏற்பட்டுள்ளது என்ற அளவில் அரசாங்க நிலைமையை முன்பு ஆட்சியில் இருந்தவர்கள ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

எனதுபடங்கள்கிராமங்களில் நன்றாக ஓடுகின்றன என்பதால் ஆத்திரப்பட்டு திரைப்படத்துறையையே நசுக்க முடிவு செய்தனர் திரைப்படத்துறைக்கு ஒட்டு மொத்த வரிவிதிப்பு முறையை 'டூர்' என்று அமல்படுத்தினார்கள் அதே வேகத்தில் அதை நிறுத்தவும் செய்தனர்.

எல்லாக் கோப்புகளும் பார்க்கப்பட்டுள்ளன. முறைகேடு உள்ளவை எல்லாம் வழக்கு மன்றம் போகும் பல அதிகாரிகள் கெடுக்கப்பட்டு இருக்கிறார்கள். அவர்கள் எல்லாம்கெட்டவர்கள் அல்ல, கெடுக்கப்பட்டுள்ளனர்.

நாங்கள் வகிக்கும்பதவி மக்கள் தந்தது. இதை மக்கள் எப்போது திருப்பி எடுக்கப் போகிறார்களோ தெரியாது மக்கள் விரும்பும வரை பதவியில் இருப்போம்.

தவறு செய்தவர்கள் யாராக இருந்தாலும அனுமதிக்க முடியாது. முன்பு தவறுகள் ஏராளமாக நடந்துள்ளன, பலபேர் கைது செய்யப்பட இருக்கிறார்கள்.

நியாயத்தைநிலைநாட்ட எதையும் விட்டுத்தர மாட்டோம் ஏனென்றால் கலைவாணருடன் பழகியவர்கள் நாங்கள் மக்களுடன் பழகுவது. அவர்களுக்காகத் தொண்டாற்றுவது போன்றவற்றை அமரர் அண்ணாவிடம் கற்றவர்கள் நாம்.

### உலகம் தெரியாத நிலை

ஆரம்ப காலத்தில் கலைவாணரோடுபழகியபோது நான் இப்போது இருப்பது போல் இல்லை. அப்போதெல்லாம் எனக்கு முன் கோபம் அடிக்கடி வரும். என்னை திருத்த கலைவாணர் முயன்றார். ஒரு நாள் மாலையில் கலைவாணர் குளிக்க போனார். அப்போது என்னைப் பார்த்து "தம்பி எல்லாரிடமும் சண்டை போடுகிறாய் நாம் இருவரும குஸ்தி போடலாம் வா" என்று அழைத்தார் நான் முடியாது என்றேன். "போங்கண்ணே வரமுடியாது" என்றேன்.

சிறிதுநேர வாக்கு வாதத்துக்குப்பின் அவரே சண்டைக்கு வந்துவிட்டார். அரைமணி நேரம் ஒருவரும் கீழே விழவில்லை பின்னர் என்னை கீழே தள்ளிவிட்டார். நான் மீண்டும் வாருங்கள் சண்டை போடலாம் 3 தடவை சண்டை போட வேண்டும். அதன் பிறகு தான் யாருக்கு வெற்றி யாருக்கு தோல்வி என்று முடிவு செய்ய வேண்டும்" என்றேன்.

அவர் "போதம்பி இனி நான வரமாட்டேன். நீ கீழே விழுந்து வானத்தில் நட்சத்திரத்தையும் பார்த்துவிட்டாய்" என்று கூறினார்.

இதன் மூலம் எதிரி எப்படிப்பட்டவர் என்று புரியும் சந்தர்ப்பத்தை எனக்கு ஏற்படுத்தினார். எதிர்பற்றிஎச்சரிக்கையாக இருக்கவேண்டும்என்பதை எனக்குச் செல்லித் தந்தவர் கலைவாணர்.

கலைஞர் கதைஎழுதுவார். அவர் கதை எழுதும்போது அது இப்படித்தான முடியும என்று முன்கூட்டியே கூறிவிடுவேன். ஆனால நான எழுதும் கதை எப்படி முடியும் என்பது அவருக்குத் தெரியாது.

கலைவாணர் ஆசானாக இருந்து கற்றுத்தந்த பாடம் எதிரியைப்பற்றித் தப்புக்கணக்கு போடக் கூடாது என்பது.

### பதவியில் இருக்க முடியுமா என்றோர் போனது எங்கே?

தேர்தல்சமயத்தில்சிலர் சொன்னார்கள். எம். ஜி. ஆர் ஒருநாள் பதவியில் இருக்க முடியுமா? ஒருமாதத்துக்குள் அவரை நாங்கள் கவிழ்த்து விட மாட்டோமா" என்றெல்லாம் பேசினார்கள்.

இப்போது 55 நாட்கள் சட்டசபையை நடத்தி முடித்து விட்டு இங்கேவந்திருக்கிறோம்.

(பலத்த கைதட்டல்)

முன்பு சட்டசபைக்கு வா பார்க்கலாம் என்றார்கள். நான சபைக்கு போகாததை வைத்து ஏதேதோ கூறினார்கள்.

அதன் பிறகு சட்டசபையில் என்னால் சமாளிக்க முடியுமா என்று நல்லெண்ணம் படைத்த பலர் கேட்டார்கள் ஆனால் நடப்பது என்ன? நான் சட்டசபைக்குப் போய்க் கொண்டு இருக்கிறேன்.

(மீண்டும் பலத்த கைதட்டல்)

இப்போது தான அவர்களுக்குஎல்லாம்புரிகிறது. நாம் அடுத்தவர்களை ஏமாற்றவும் கூடாது, அடுத்தவர்களிடம் ஏமாறவும் கூடாது என்பதை கற்றுத் தந்தவர் கலைவாணர்.

பணத்தை அவர் மதிக்கவில்லை.

1935ல் நாங்கள் ஆழ்வார்பேட்டையில்இருந்த நேரம்—படக் கம்பெனியில் இருந்தபோது என் அண்ணனை அழைத்து ஊருக்குப் பணம் அனுப்ப வேண்டும். வண்டியில் போய் அனுப்பி விட்டு வந்து விடுங்கள் அண்ணே" என்றார். எனது தமையனார் "பணம் எங்கே வைத்திருக்கிறீர்கள், சாவியை கொடுங்கள்" என்றெல்லாம் கேட்டார்.

தகரப்பெட்டியில் இருக்கிறது. அதற்கு பூட்டே கிடையாது என்றார் கலைவாணர்.

ஏராளமான ரூபாயை பெட்டிக்குள்வைத்து பூட்டாமல்திறந்துவைத்திருந்தார். பணத்துக்கு அவர் தனி மரியாதை கொடுக்கவில்லை. பணம் வரும் போகும் ஆனால் மனிதத்தன்மைதான் முக்கியம என்று நினைத்தார். பணம் சேர்த்து அதன் மூலம் புகழ்பெற விரும்பவில்லை.

தனது கொள்கைகளைச் சொல்லி அதற்காக பாடுபட்டுவந்தார். உதவி கேட்டு வருபவர்களுக்கு தாராளமாகஉதவினார்.

### நல்ல புகழ்

ஒருவர் உயிரோடு இருக்கும்போது அவரை புகழ்வதைவிட இறந்த பின் புகழ்வதே உண்மையான புகழாக இருக்கும். கலைவாணர் பெயரில் அவர் உயிரோடு இருந்தபோது பலமன்றங்கள் இருந்தன, இப்போது அதைவிட அதிக மன்றங்கள் அவர் பெயரில் இருக்கின்றன, மக்களுக்காக வாழ்ந்தவர் என்பதால் மக்கள் மனதில் அவர் இடம் பிடித்தார்.

எந்த [illegible] யையும் [illegible] செய்வார். என்றாலும் எந்த ஆபத்தும் அவரை நெருங்கவில்லை, காரணம் அவருக்கு மக்கள் ஆதரவு இருந்தது தான். அவர் சிறைக்குச் சென்று விட்டு வெளியே வந்ததும் பல கம்பெனிகள் அவரை ஒப்பந்தம் செய்து கொண்டன. அந்த அளவுக்கு நன்மதிப்பு பெற்றிருந்தார்.

மதுரம் அம்மையார் ஒரு சம்பவத்தைச் சொன்னார். ஒருவர் கலைவாணரிடம் வந்து தனது மகள் திருமணத்துக்கு பணம் கேட்டிருக்கிறார். கையில் பணம் இல்லாததால் கலைவாணர் தனது வெள்ளி கூஜாவை யாருக்கும் தெரியாமல் எடுத்து கொடுத்து இதைவிற்று திருமணத்தை நடத்து என்று கூறி இருக்கிறார்.

விளம்பரத்தைவிரும்பாமல் உதவிகளைச் செய்து வந்தார். இப்படி வீட்டில உள்ளவர்களுக்குக்கூட தெரியாமல் வெள்ளி கூஜாவை திருமணத் செலவுக்காக எடுத்து கொடுத்தவர் கலைவாணர் ஒருவராகத்தான் இருக்க முடியும்.

அப்படிப் பட்டவரை நினைத்துப் பார்ப்பதன் மூலம் நமது குற்றம் குறைகளைக் களைந்து கொள்ள முடியும்.

சிறைக்குப் போகுமுன் குடிப்பழக்கம் இருந்ததாகவும் திரும்பி வந்தவுடன் அந்த வழக்கத்தை விட்டுவிட்டதாகவும் கூறினார். தவறுகளை அவர் துணிச்சலாக ஒப்புக் கொள்வார்

ஒருதடவை ஒரு நண்பருடன் கோபம் ஏற்பட்டு விரக்தி ஏற்பட்ட நிலயில் குடித்து விட்டு போலீஸ் நிலயத்துக்குச் சென்றிருக்கிறார். அந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டரிடம் "நான்குடித்து இருக்கிறேன். என்னை கைது செய்யுங்கள்" என்றார் அந்த அதிகாரி அவரை கைது செய்ய

(1-ம் பத்தி பார்க்க)

### கலைவாணர் வழிகாட்டி

திரைப்படங்களில் மக்களுக்கு ஏற்ற கருத்துக்கள் உள்ளனவா என்பதில் கலைவாணர் மிகவும் அக்கறை காட்டுவார். மக்களுக்குத் தொண்டு செய்யும் வகையில் அவர்களுக்கு நல்ல கருத்துக்களைத் திரைப்படங்கள் மூலம் சொல்வதற்கு எனக்கு வழிகாட்டியாக இருந்தவர் கலைவாணர் என்று முதல்வர் புரட்சித் தலைவர் கூறினர்.

(7-ம் பத்தி தொடர்ச்சி)

மறுத்தார்: கலைவாணர் விடவில்லை, தன்னை கைது செய்யச் சொன்னார். இறுதியாக அந்த இன்ஸ்பெக்டர் ஐ. ஜி. யுடன் தொடர்பு கொண்டு கலைவாணர் கூறுவது பற்றிச் சொல்லி இருக்கிறார்.

ஐ ஜி: கலைவாணருடன் பேசி அவரை வட்டுக்கு போகச் சொல்லி இருக்கிறார், கலைவாணர் தொலை பேசியிலேயே "உங்களுக்கெல்லாம் அதிகாரம் தந்தது தப்பு. நான் குடித்திருக்கிறேன் கைது செய்யுங்கள், மற்றொருவர் என்றால் கைது செய்திருப்பீர்கள். எனக்கொரு நீதி, மற்றவர்ளுக்கு ஒரு நீதியா" என்று கேட்டார். நீங்கள் தனி மனிதரல்ல. மக்கள் மத்தியில் மக்கள் ஆதரவுடன்இருப்பவர், ஆகவே உங்களைகைதுசெய்யமாட்டோம் என்று போலீசார் கூறினர்.

பின்னர் அவரை வண்டியில்உட்காரவைத்து "வீட்டில்கொண்டுபோய்போலீசார் விட்டு வந்தனர்" இப்போது எந்த நடிகராவது குடித்து இருந்தால்போலீசார் விடுவார்களா?

உழைப்பால் உயர்ந்த அவர் பலபேரை வாழ வைத்தார்.

புளிமூட்டை ராமசாமி ஆள்வார் குப்புசாமி, காகா ரதாகிருஷ்ணன் போன்ற கலைஞர்கள் எல்லாம் அவரால் வளர்ந்தவர்கள்.

உடன் இருப்பவர்கள் மீது நம்பிக்கை வைத்திருந்தார். அவர்களை சந்தேகப்பட்டு கண்காணித்து சோதனை போடும் மனப்போக்கு உள்ளவராக அவர் இருக்கவில்லை.

தன்னை திட்டுபவரையும் அழைத்து சாப்பாடு போடுவார் அவர் சாப்பிடும் போது உடன் எத்தனை பேர்இருந்தாலும் சரி. வீட்டில் சாப்பாடு இருக்குமா என்பது பற்றிக்கூட நினைக்காமல் அனைவருக்கும சாப்பாடு போடச் சொல்லுவார்.

ஜீவானந்தம் கூட அவருடன் நல்ல பழக்கம் வைத்திருந்தார் ம. பொ. சி. யும் அப்படித்தான்.

கலைவாணர் கோவிலுக்குப் போகமாட்டார். போனாலும் பக்தர்களை கேலி செய்யமாட்டார். அறநிலையத்துறை முந்திய ஆட்சிக்காலத்தில் பாழ்படுத்தி இருக்கிறார்கள். அங்கே கொடுங்கோன்மை நடந்துள்ளது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

# கலைவாணர் அருங்குணம் பற்றி புரட்சித் தலைவர்

சென்னை: ஆக: 31— கலைவாணரின்சிறப்பியல்புகளைக் குறித்து பல்வேறு சம்பவங்களை வாணி மகாலில் நடந்த கலைவாணர் விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் தெரிவித்தார்: அவர் கூறியதாவது:—

முன்பு தஞ்சையில் புயலால் சேதம் ஏற்பட்ட போது பாதிக்கப்பட்ட மக்களுக்கு நடிகர் சங்கத்தின் சார்பில் நிதி சேர்த்துத்தரமுடிவு செய்தோம்: கலைவாணர் வீட்டுக்கு நேரடியாக சென்று அவரிடம் இதுபற்றிச் சொன்னேன்: கலைவாணர் சங்கத்தலைவராக இருந்தார், நான் செயலாளராக இருந்த நேரம்.

அப்போது அவர் கண் கலங்கியவாறு என்னிடம் கூறியது இன்னும் நினைவில் இருக்கிறது:

"பலர் கஷ்டப்படும் போது அவர்களுக்கு ஒரு மூட்டை அரிசி அனுப்பக் கூட முடியவில்லையே. நான் இருந்தென்ன இறந்தென்ன" என்று வேதனைப்பட்டார். மக்களுக்கு உதவி செய்து அவர்களை வாழ வைக்க ஆசைப்பட்டார்.

கலைவாணர் ஐந்து காஸ்டாண்ட்கட்டிக்கொடுத்திருக்கிறார்: அது பலருக்குத் தெரியாது.

அவர் எல்லா கட்சியினருக்கும் வேண்டியவராக இருந்தார்.

கலைவாணர் மீதும் பாகவதர் மீதும வழக்கு போடப்பட்டது. ஒருவரை கொலை செய்ய பணம் கொடுத்ததாகவும் சதித்திட்டம் தீட்டியதாகவும் வழக்கு போடப்பட்டது. அந்த சதி திட்டம் ஒற்றவாடை கொட்டகையில் நடந்ததாகக்கூறினார்கள்.

சதி திட்டம் நடத்த ஒற்றவாடை தியேட்டர் தானா கிடைத்தது?

இருவரையும் ஒழித்து விட்டால் வேண்டியவர்களை - சொந்தக்காரர்களை அவர்கள் பெற்றிருந்த இடத்தில் அமர்த்தலாம் என்று சிலர் திட்டமிட்டு இந்தக் காரியத்தை செய்தனர்.

இறுதியில் வழக்கு தள்ளுபடியானது: இருவரும வெளியேவந்தார்கள் ஆயிரக்கணக்கான மககள் கலைவாணரை வரவேற்று மாலை அணிவித்ததைப் பார்த்து ஆனந்தக் கண்ணீர் வடித்தேன், கலைவாணர் உள்ளம் சதித்திட்டத்தை ஒத்துக் கொள்ளாத உள்ளம் என்பதை மக்கள் புரிந்து வைத்திருந்தனர் கலைஉலகில்உள்ளவர்கள் வசதியுடன் இருப்பவர்கள் தங்களை மக்கள் மாமன்றத்துக்குச் சொந்தக்காரர்களாகக்கிக் கொள்ளவேண்டும தனி மனித உரிமைகளை மதிக்க வேண்டும். மக்கள் நலனில் அக்கறை கொள்ளவேண்டும.

தம்பி ராஜேந்திரனுக்கு ஓட்டுக் கேட்பதற்காக உடல்நிலை சரி இல்லாத நேரத்திலும் கலைவாணர் சென்றார். அவர் சம்பாதித்த பணம் லட்சக்கணக்கில் கொடுத்தது கோடிக் கணக்கில் இருக்கும்,

மக்களின் தேவைகளை அறிந்து குறைகளைத் தீர்த்து வந்தவர் கலைவாணர்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினர்.

விமான நிலையத்தில் உற்சாகவழியனுப்பு;

# பண்ருட்டி கிழக்கு ஜெர்மன் பயணம்: புரட்சித்தலைவர் ஆசி

**சென்னை, ஆக. 31— முதல்வர் புரட்சித் தலைவரிடம் ஆசி பெற்று பொதுப்பணித்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கிழக்கு ஜெர்மனிக்கு புறப்பட்டார். டெல்லியில் செய்தி ஒலிபரப்பு மாநாட்டில் கலந்துகொள்ளச் செல்லும் அமைச்சர் ஆர்.எம் வீயையும், புதுவை முதல்வர் எஸ். ராமசாமியையும் புரட்சித்தலைவர் வழியனுப்பிவைத்தார்.**



கிழக்கு ஜெர்மனியின் 30-வது குடியரசு விழாவில் கலந்து கொள்ளுவதற்கு அழைக்கப்பட்ட தமிழக பொதுப்பணித் துறை அமைச்சர்பண்ருட்டி எஸ். ராமச்சந்திரன் சென்னையில் இருந்து விமானம் மூலம் புறப்பட்டுச் சென்றார்.

நேற்று மாலை டெல்லிக்குப் புறப்பட்ட அவரை வழியனுப்ப முதல்வர் புரட்சித் தலைவர் விமான நிலயத்திற்கு சென்று வழியனுப்பி வைத்தார்:

டெல்லியில் நடை பெறும் செய்தித்துறை அமைச்சர்கள் மாநாட்டில் கலந்து கொள்வதற்காக டெல்லி செல்லும் தமிழக செய்தி - சுற்றுலாத்துறை அமைச்சர் ஆர்: எம். வீ, யையும் புதுவை முதல்வரும் செய்தி சுற்றுலாத் துறை அமைச்சருமான எஸ், ராமசாமியையும் முதல்வர் புரட்சித்தலைவர் வழியனுப்பிவைத்தார்.

டெல்லிக்குப் புறப்பட்ட அமைச்சர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சந்தன மாலைகளை அணிவித்து ஆசி கூறினர்.

### நாஞ்சிலார்

நிதியமைச்சர் நாஞ்சிலார். உணவு அமைச்சர் ஜி ஆர், எட்மண்ட். அரிசன நலத்துறை அமைச்சர் பெ. சவுந்தரபாண்டியன், போக்குவரத்து அமைச்சர் பொன்னையன்; கழக கொள்கை பரப்புச் செயலாளர் எஸ்.டி.எஸ். எம்.பி., நாடாளுமன்ற உறுப்பினர் இரா.மோகனரங்கம், துணை சபாநாயகர் திருநாவுக்கரசு ஆகியோர் அமைச்சர்களை வழியனுப்பி வைததனர்.

சட்டமன்ற உறுப்பினர்கள் சின்னசாமி, ஜெயவேலு.ஐ.கணேசன், காளியப்பன மற்றும தலைமைக் கழக வழக்கறிஞர் ராமகிருஷ்ண பாபு, விருத்தாச்சலம்தொகுதி அமைப்பாளர் ஆர்.குஞ்சிதபாதம் எம்.எம்.ரவீந்திரன், ஜே. பாலன், ராஜ்குமார் ஆகியோர் அமைச்சர்களை வழியனுப்ப வந்திருந்தனர்.

அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், அமைச்சர் ஆர். எம். வீ ஆகியோரின் குடும்பத்தினரும் வழியனுப்பு விழாவிற்கு வந்திருந்தனர்.

# கலைவாணர் 20-வது நினைவு நாள்

சென்னை, ஆக: 31— கலைவாணர் என்: எஸ்: கிருஷ்ணனின் 20-வது நினைவு விழா சென்னை தியாகராய நகர் வாணி மகால் அரங்கில் நடைபெற்றது.

எஸ். வி. சகஸ்ரநாமம், தக்கேசிதுழு னினபாட்டுக்கச்சேரியுடன் விழாத் தொடங்கியது. கலைவாணர் நிலயத்தைச்சேர்ந்த வெ. நாராயணன் வரவேற்புரை நிகழ்த்தினர். சித்ரமகால் கிருஷ்ணமூர்த்தி துவக்கவுரையாற்றினர்.

டைரக்டர்ப.நீலகண்டன் விழாவிற்கு தலைமை தாங்கினர். விழாத் தொடங்கியதும் வலம்புரி நாகராஜன் கலைவாணர் பற்றி ஒரு மெல்லிசைப் பாடலைப் பாடினர்.

விழாவில் பங்கேற்ற கலைஞர் எ. வே. ராதா விற்கு கி.வா ஜெகந்நாதன் கலைவாணர் நிலயத்தின் சார்பாக பொன்னாடை போர்த்தி பாராட்டினர்.

கலைவாணரின் மருமகன் கல்லூரி முதல்வர் எஸ். வரதராசன முதல் வருக்கும அமைச்சர்களுக்கும கலைவாணர் நினைவாக 'பேனா'வை பரிசாக அளித்தார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர், நிதி அமைச்சர் நாஞ்சிலார், கி. வா. ஜெகந்நாதன். ஏஸ். ஏஸ். ராஜேந்திரன், ஜெமினி கணேசன் ஆகியோர் விழாவில்கலந்து கொண்டு பேசினர்கள்.

உள்ளாட்சித்துறை அமைச்சர் கா. காளிமுத்து கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் கைத்தறித்துறை அமைச்சர் ராஜா முகமது நாடாளுமன்ற கழக குழுத்தலைவரும் கொள்கை பரப்புச்செயலாளருமான எஸ். டி. எஸ் நாடாளுமன்ற உறுப்பினர் மோகனரங்கம்:

சென்னை மாவட்ட கழக பொறுப்பாளர் ஜேப்பியார் பத்திரிகையாளர் அடியார். அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக தலைமை நிலைய மேலாளர் என். எஸ், ராமதாஸ், சத்தியா ஸ்டுடியோ பி, பத்மநாபன் ஆகியோர் விழாவில் பங்கேற்றனர்.

சந்தா விவரம்

1 வருடச் சந்தா தொகை ரூ 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது.

நிர்வாகி
"அண்ணா"
156, லாயிட்ஸ் சாலை, சென்னை-600014.



# அண்ணா




# புரட்சிதலைவரோடுமோதினல்: நாஞ்சிலார் எச்சரிக்கை

**சென்னை, ஆக. 31—முதல்வர் புரட்சித்தலைவர் ராஜதந்திரம் மிக்கவர். யாரிடமும் மோதமாட்டார். யாராவது வலிய மோதினால்என்ன நடக்கும் என்பதற்கு தமிழ்நாடு நாளை வரலாறு தீட்ட இருக்கிறது என்று நிதி அமைச்சர் நாஞ்சிலார் எச்சரித்தார்.**

கொடுத்துகொடுத்து சிவந்தகரத்திற்கு சொந்தக்காரரான கலைவாணரின் வாரிசாக தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் விளங்குகிறார் என்றும் நிதிஅமைச்சர் நாஞ்சிலார் கூறினார்.

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனின் 20வது நினைவுநாள் விழாவில் கலந்துகொண்டு பேசிய நிதி அமைச்சர் நாஞ்சிலார் கூறியதாவது:

எந்த மாவட்டத்தில் கலைவாணர் பிறந்தாரோ அந்தமாவட்டத்தில்தான் நானும் பிறந்தேன் என்பதில் நான்மெத்த மகிழ்ச்சி அடைகிறேன்.

கலைவாணர்மீது கொலைக் குற்றம் சாட்டப் பெற்று அவர் சிறையில் இருந்த நேரம் நான் அப்போது 9-வது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தேன்.

அப்போது நான் ஒவ்வொரு ஊராகச் சென்று கலைவாணரை விடுதலை செய்யுங்கள். அவர் மீது கருணை காட்டுங்கள்என்று அப்போது இருந்த வெள்ளையர் ஆட்சியைகேட்டுக் கொண்டு நான் பேசிய கூட்டங்கள் ஏராளம்.

## "இதயத்தில் நான்"

அதன்பிறகு கலைவாணர் விடுதலை அடைந்தார். அவருக்கு வரவேற்புக் கூட்டம் நடைபெற்றது. அதில் நானும்பேசினேன். அங்கே என்னைப் பார்த்து என்னைப்பற்றிக் கேள்விப்பட்ட கலைவாணர் என்னை அவர் வீட்டிற்கு அழைத்துச்சென்று எனக்கு நன்றி கூறினார். மதுரம் அம்மையாருக்கும் அறிமுகம் செய்து வைத்தார். அன்றிலிருந்துநான் கலைவாணர் இதயத்தில் நீங்காத இடத்தை பிடித்துக்கொண்டேன்.

## ஊடல்

இடையில் எனக்கும் கலைவாணருக்கும் ஊடல் ஏற்பட்டது. அதற்குக் காரணமானவர்களை நான் சொல்லத்தயாராக இல்லை. தவிர்க்கப்பட வேண்டிய ஊடல் தான் அது. அரசியலில் சிண்டு முடித்துவிடுபவர்கள்தான் அந்தக் காரியத்தைச் செய்தார்கள். அவரை உங்களுக்கு சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று சொல்லிக் கொள்கிறேன்.

(கைத்தட்டல்)

## திருச்சி மாநாடு

அதன் பிறகு திருச்சி மாநாட்டிற்குகலைவாணர் வந்திருந்தார்.

எனக்குள்ளகோபதாபம் அப்போதும் மாறவில்லை. கலைவாணர் நான் அமர்ந்திருந்த இடத்திற்கு அருகே வந்தார். என்னைப் பார்த்ததும் கை எடுத்துக்கும்பிட்டார். நான் அதற்கு பதில் வணக்கம் தெரிவிக்காமலேயே இருந்துவிட்டேன்.

இப்போது நான் அதை எண்ணிப்பார்க்கிறேன். நான் அப்போது எவ்வளவு கொடுமைக்காரனாக இருந்திருக்கிறேன். பழைய கோபம்தான் என்னைத்திரும்பிக்கும்பிட மறுக்கச் செய்தது.

மதுரம் அம்மையார் என்னைப்பார்த்து இன்னுமா கோபம் போகவில்லை என்று கேட்டார்கள். நான் அதற்கும் பதில் சொல்லவில்லை. என்னைவேறொருவர் அப்படி திசை திருப்பியிருந்தார். எந்தக் காரணம்கொண்டும் கலைவாணருடன் பேசக்கூடாது என்று கூறியிருந்தார். அதனால்தான் நான் என்னை அடக்கிக்கொண்டு பேசாமல் இருந்தேன்.

## வில்லுப் பாட்டு

திருச்சி மாநாட்டு நிகழ்ச்சியில் அன்று இரவு கலைவாணரின் வில்லுப் பாட்டு நிகழ்ச்சி இருந்தது. அண்ணா அவர்கள் பாராட்டும்படியாக அந்தவில்லுப்பாட்டு நிகழ்ச்சி இருந்தது. அந்த வில்லுப்பாட்டு நிகழ்ச்சியில் பத்து நிமிடநேரம் என்னைப்பற்றிய பாடியும், பேசியும் நிகழ்ச்சியை நடத்தினார். கலைவாணரின் பெருந்தன்மையை எண்ணி நான் வியந்து போனேன்.

கலைவாணர் கலைப் பெட்டகமாகத் திகழ்ந்தார். நடமாடும் சிந்தனையாளராக விளங்கினார். கலை உலகில் பல புதுமைகளைச் செய்து காட்டினார். பகுத்தறிவு கருத்துக்களை மிகக்கூர்மையோடு பரப்பினார்.

## பழைய படம்

கலைவாணர் நடித்த பழைய படங்களைப் பார்த்தால் இருபதாம் நூற்றாண்டில்-இப்போது வெளி வந்த படங்களைப்போல கருத்துச் செறிவோடும்புதுமையோடும் காணப்படுவதை நம்மால் உணர முடியும்.

யாருடைய உள்ளமும் நோகாமல் பகுத்தறிவுக் கருத்துக்களை திரைப்படம் நாடகம் மூலம் பரப்பினார்.

## முதல்வர் முடிவிற்கு...

கலைவாணர் நினைவாக என்னென்னசெய்யவேண்டும் என்பதை இங்கே பேசிய வெ. நாராயணன் கோரிக்கையாக வைத்தார்.



உங்கள் கோரிக்கைகளை முதல்வர் புரட்சித்தலைவர் செய்வார்என்றநம்பிக்கை உங்களைப் போல எனக்கும் உண்டு. உங்கள் கோரிக்கைகளைமுதலமைச்சர்புரட்சித்தலைவர்ஏற்றுக் கொள்வார்.

எப்படிச் செய்வது என்பதை முதல்வர் புரட்சித் தலைவர் முடிவிற்கு விட்டு விடுவீர்களேயானால் நீங்கள் நினைப்பதை விடச் சிறப்பாக புரட்சித்தலைவர் செய்வார்.

எந்தநேரத்தில் எப்படி செய்வது-எதை எப்படிச் சாதிப்பதுஎன்பது தமிழக முதல்வர் புரட்சித் தலைவருக்குநன்றாகவே தெரியும்.

## ராஜதந்திரி

தமிழக முதலவர் புரட்சித்தலைவர் சிறந்த ராஜதந்திரி. யாரிடமும் மோதமாட்டார். யாராவது வலிய மோதினால் அதற்குப் பிறகு என்ன நடக்கும் என்பதை தமிழ்நாடு நாளை வரலாறு தீட்ட இருக்கிறது.

## சிவந்த கரம்

கலைவாணர் லட்சக் கணக்கில் சம்பாதித்தார். அதை மற்றவர்களுக்கு வாரி வாரி வழங்கினார். நாகர்கோயில்காரர்கள் அவர் வீட்டில் நிரந்தரமாகவே குடி கொண்டிருந்தார்கள். அவர் வீட்டில் கல்யாண வீடு போல சமையல் நடந்து கொண்டே இருக்கும்.

கலைவாணரின் 20-வது நினைவு விழாவில் அவா செய்த தர்ம காரியங்கள் மற்றவர்களுக்கும் இரக்க உணர்வை ஏற்படுத்த இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வோம்.

கலைவாணர் கொடுத்து கொடுத்துப்பழக்கப்பட்டவர். அவர் வாரிசாக கொடுத்துக் கொடுத்துப் பழக்கப்பட்ட புரட்சித் தலைவர் விளங்குகிறார்.

நான் உங்களுக்கு ஒன்றைத் தெரிவித்துக்கொள்கிறேன். புரட்சித்தலைவர் கொடுத்துப் பழக்கப் பட்டவர்தான. ஆனால் எடுத்துப் பழக்கப்பட்டவர்கள் ஏராளம் இருக்கிறார்கள்.

கொடுத்துப்பழக்கப்பட்டவர்கள் சிலர்தான இருக்கிறார்கள். அதற்குச் சான்றாகபுரட்சித் தலைவர் விளங்குகிறார்.

கலைவாணர் மாவட்டத்தைத்தாண்டி-தமிழக எல்லையைத் தாண்டி-இந்தியத்துணைக் கண்டத்தைத் தாண்டி-ரஷ்யா சென்று அங்கே தமிழ் பண்பாட்டை — தமிழ் கலாச்சாரத்தைப் பரப்பியவர் — உலகத்திற்கே உணர்த்தியவர்கலைவாணர் தான் என்பது உங்களுக்குத் தெரியும்.

இவ்வாறு நாஞ்சிலார் கூறினார்.



# உலக அரங்கில்

எம் எல் ஏ.க்களுக்கு

## சிறப்புப் பரிசு

சென்னை, ஆக. 31—தமிழக சட்டமன்ற பட்ஜெட் கூட்டத் தொடர் கடந்த 29-ம் தேதி (திங்கட்கிழமை) முடிந்தது. அன்று சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவருக்கும் தோல்பை பரிசாக வழங்கப்பட்டது.

அவை முன்னவர் நாஞ்சிலார் இதுபற்றி குறிப்பிடும்போது ஏராளமான ஃபைல்களை தூக்கிவர உறுப்பினர்களுக்கு இந்ததோல்பை பெரிதும் உதவும் என்றார்.

## பீகிங்கில் டிட்டோவிற்கு உற்சாக வரவேற்ப

பீகிங், ஆக. 31— மக்கள் சீனவிற்கு முதல் முறையாக விஜயம் செய்த யூகோஸ்லேவிய அதிபர் மார்ஷல் டிட்டோ விற்கு பீகிங் விமான நிலையத்தில் மிகவும் உற்சாக மான வரவேற்பு அளிக்கப் பட்டது.

சீனகம்யூனிஸ்ட் தலைவர் ஹுவா-குவா-பெங்உட்பட உயர் தலைவர்கள் விமான நிலையத்தில் டிட்டோவை வரவேற்றனர். டிட்டோவின் சீனவிஜயம் இரு நாடுகளுக்கும் இடையிலான உறவில் மறக்க முடியாத மாபெரும் சம்பவம் என்று மக்கள் சீனத்தின் அதிகாரபூர்வ பத்திரிகையான "பியூப்பிள்ஸ் டெய்லி" தலையங்கம் தீட்டியிருந்தது.

## இலங்கையில் மீண்டும் ஊரடங்கு

கொழும்பு, ஆக. 31—இலங்கையில் யாழ்ப்பாணம் மாவட்டத்தைதவிர மற்ற எல்லாப் பகுதிகளிலும் இரவில் ஆறு மணிநேர ஊரடங்குச் சட்டம் மீண்டும் நேற்று அமல் நடத்தப்பட்டது.

"கிட்டத்தட்ட சகஜ நிலைமை ஏற்பட்டு விட்டதாக" பார்லிமெண்டில் அரசுக் கட்சி முன்னவரும் அமைச்சருமான ஆர். பிரேமதாசா கூறினார்.

## சென்னையில் சர்வதேச பட விழா

சென்னை, ஆக. 31—சர்வதேச திரைப்படவிழா சென்னையில் ஜனவரி 3 முதல் 17தேதிவரை நடைபெறலாம் என்று தென் இந்திய படத்தயாரிப்பாளர் சங்கம் அறிவித்துள்ளது.

## திருமணம்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழக 85 வது வட்ட பேரறிஞர் அண்ணா நற்பணி மன்றத் தலைவர் ஆர். பழனிக்கும், செல்வி ரமணிபாய்க்கும் இன்று (புதன்) செல்லப் பிள்ளையார்கோவில் தெருவில் உள்ள சீனிவாசப் பெருமாள் கல்யாண மண்டபத்தில் திருமணம் நடந்தது.

அமைச்சர் கே. ராஜா முகமது, ஜேப்பியார், ... ராஜ்குமார் டி. வெங்கட்ராமன் ஆகியோர் மணமக்களை வாழ்த்திப் பேசினார்.

# இந்திய செய்திகள்



## சஞ்சீவ ரெட்டி சுகவீனம்: அமெரிக்கா விரைகிறார்

புதுடெல்லி, ஆக. 31—ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டிக்கு நுரையீரலில் கோளாறு உள்ளதாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. சிகிச்சைக்காக அவர் செப்டம்பர் 4-ந் தேதி நியூயார்க் பயணமாகிறார்: ஞாயிறன்று சஞ்சீவ ரெட்டிக்கு வழக்கமான உடல் பரிசோதனை நடந்த போது இக்கோளாறு கண்டு பிடிக்கப்பட்டது.

சஞ்சீவ ரெட்டியை எக்ஸ்ரே எடுத்து பார்த்த தில் ஒரு நாணய அளவிற்கு நுரையீரலில் நைவுப்புண் காணப்பட்டது.

அது காச நோய் அல்லது புற்று நோய்க்கு முன்னோடி என வர்ணிக்கலாம் என்று ஒரு உயர்தரடெல்லி டாக்டர் கூறினார்.

ரெட்டியுடன் அவரது மகன்சுதிர்ரெட்டி மற்றும் ஆறு டாக்டர்கள் நியூயார்க்கிற்கு உடன் செல்கிறார்கள்.

## பன்சிலாலுக்கு விலங்கு: சரண்சிங் கருத்து

புதுடெல்லி, ஆக. 31—முன்னாள் பாதுகாப்பு அமைச்சர் பன்சிலாலுக்கு கைவிலங்கு மாட்டியிருக்கக்கூடாது என்று மத்திய உள்துறை அமைச்சர் சரண்சிங் கருத்துத் தெரிவித்து உள்ளார்.

## இந்திராவிற்கு பாஸ்போர்ட் கிடைக்குமா ?

புதுடெல்லி, ஆக. 31- வெளி நாடுகளுக்குச் செல்வதற்காக பாஸ்போர்ட் கோரி முன்னாள் பிரதமர் இந்திராகாந்தி விண்ணப்பித்து இருக்கிறார் என்று தெரிகிறது.

பிரதமர் என்ற முறையிலும், மந்திரி என்ற முறையிலும் கடந்த 12 ஆண்டு காலமாக அவருக்குப் பாஸ்போர்ட் இருந்தது. மார்ச்



மாதம் ... இழந்ததும் ... பாஸ்போர்ட் ... தாகி விட்டது.

உரை நிகழ்த்த வருமாறு வெளிநாடுகளிலுள்ள பல்வேறு பல்கலைக் கழகங்களிலிருந்தும் இந்திராகாந்திக்கு அழைப்புக்கள் வந்துள்ளன.

இந்திராகாந்திக்கு பாஸ்போர்ட் வழங்குவதில் ஜனதாக் கட்சிக்குள் இருவிதக் கருத்துக்கள் நிலவுவதால் பாஸ்போர்ட் வழங்கப்படுமா என்பது தெளிவாகத் தெரியவில்லை.

## டி.பி.மிஸ்ரா ராஜினாமா

ஜபல்பூர், ஆக. 31—மத்தியப்பிரதேசமுன்னாள் முதலமைச்சரும், பிரபல காங்கிரஸ் தலைவருமான டி.பி. மிஸ்ரா காங்கிரஸ் கட்சியிலிருந்து ராஜினாமா செய்துவிட்டார்.

எந்த அரசியல் கட்சியிலும் சேருவதில்லை என்று அவர் முடிவு செய்திருக்கிறார்.

## ஜனதா செயற்குழு

அமதாபாத், ஆக. 31- ஜனதாக் கட்சியின் மத்திய காரியக் கமிட்டிக்கூட்டம் அறிவிக்கப்பட்டதற்கு மூன்றுநாள் முன்னதாகவே குஜராத்தில் அக்டோபர் 14-ஆம் தேதி நடக்கும்.